# 1 படைப்பாளன் அல்லாஹ்

வானத்தைப் படைத்தவன் அல்லாஹ்.

பூமியைப் படைத்தவன் அல்லாஹ்.

வானத்துக்கும் பூமிக்கும் இடையில் உள்ள அனைத்தையும் படைத்தவன் அல்லாஹ்.

அவை அனைத்தையும் பரிபாலிப்பவன் அல்லாஹ்.

அவனே ரப்புல் ஆலமீன் ஆவான்.

سُبْحَانَ اللَّهِ

ஸுப்ஹானல்லாஹ்!

தெரிவுசெய்க.

(சூரியன், மரம், மலை, சந்திரன்)

1. வானத்திலுள்ள இரு பொருள்கள்

அ. ........................ ஆ. ..........................

2. பூமியிலுள்ள இரு பொருள்கள்

அ. ........................ ஆ. ..........................

# 2 அல்லாஹ்வை நினைவுகூர்வோம்

நாம் உயிர் வாழ்வதற்கு

காற்று தேவை.

நீர் தேவை.

உணவு தேவை.

ஏனைய உயிரினங்களுக்கும் இவை தேவை.

இவை அனைத்தையும் தருபவன் அல்லாஹ்.

அவனை எப்போதும் நினைவில் கொள்வோம்.

அவனிடமே
இவற்றை வேண்டுவோம்.

விடை தருக.

1. நாம் உயிர் வாழ்வதற்குத் தேவையானவை

அ. உணவு

ஆ. ...........................

இ. ...........................

2. எமக்குத் தேவையான உணவுப் பொருட்கள்

அ. அரிசி

ஆ. ...........................

இ. ...........................

3. மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் தேவையான உணவுப் பொருட்கள்

அ. பழங்கள்

ஆ. ...........................

இ. ...........................

# 3 ஆமன்து பில்லாஹ்

اٰمَنْتُ بِاللّٰهِ وَمَلاَئِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ

وَالْيَوْمِ الأٰخِرِ وَالْقَدْرِ خَيْرِهِ وَشَرِّهِ

مِنَ اللّٰهِ تَعَالٰى

1. அல்லாஹ்வை ஈமான் கொண்டேன்.
2. மலக்குகளை ஈமான் கொண்டேன்.
3. வேதங்களை ஈமான் கொண்டேன்.
4. ரஸூல்மார்களை ஈமான் கொண்டேன்.
5. இறுதி நாளை ஈமான் கொண்டேன்.
6. கழா கத்ரை ஈமான் கொண்டேன்.

இவற்றை நம்பிக்கை கொண்டு
முஸ்லிமாக வாழ்வோம்.

நாம் ஈமான் கொள்ள வேண்டிய ஆறு அம்சங்களும் எவை?

1.
2.
3.
4.
5.
6.

## செயற்பாடு

ஆமன்து பில்லாஹ் எனும் தொடரை மனனமிட்டுக் கூறுக.

# 4 மலக்குகளை ஈமான் கொள்வோம்

மலக்குகள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள்.

அவர்களை எம்மால் காண முடியாது.

அவர்கள் எம்மைக் காண்பார்கள்.

அவர்களில் பத்துப் பேர் முக்கியமானவர்கள்.

அவர்களில் நால்வரின் பெயர்களையும் பணிகளையும் அறிந்துகொள்வோம்.

### 1. ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம்

அல்லாஹ்வின் கட்டளைகளைக் கொண்டு வருபவர்

### 2. மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம்

உணவு, மழை, காற்று போன்றவற்றை நிர்வாகிப்பவர்

3. இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம்
உயிர்களைக் கைப்பற்றுபவர்

4. இஸ்ராபீல் அலைஹிஸ்ஸலாம்
ஸூர் ஊதுபவர்

**மலக்குகளை நம்பிக்கை கொள்வோம்.**

முக்கியமான மலக்குகள் நால்வரின் பெயர்களை எழுதுக.

1. ..................................................

2. ..................................................

3. ..................................................

4. ..................................................

# 5 புனியல் இஸ்லாம்
# بُنِيَ الْإِسْلَامُ

இஸ்லாம் ஐந்து விடயங்கள் மீது கட்டியெழுப்பப்பப்பட்டுள்ளது. அவை,

1. சாட்சி கூறுதல் (கலிமாவை மொழிதல்) الشَّهَادَةُ
2. தொழுகையை நிறைவேற்றுதல் الصَّلَاةُ
3. ஸக்காத் கொடுத்தல் الزَّكَاةُ
4. நோன்பு நோற்றல் الصَّوْمُ
5. ஹஜ் செய்தல் الْحَجُّ

மேற்கூறப்பட்ட ஐந்து விடயங்களையும் மனனமிட்டுக் கூறுக.

# 6 கலிமா ஷஹாதா

أَشْهَدُ أَنْ لاَإِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ
وَ أَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُوْلُهُ

அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு
வஹ்தஹு லாஷரீக்கலஹு
வஅஷ்ஹது அன்ன முஹம்மதன்
அப்துஹு வரஸூலுஹு

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவனில்லை எனச் சாட்சி கூறுகின்றேன். அவன் தனித்தவன். இணை துணை அற்றவன்.

மேலும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் அடியார் என்றும் அவனது ரஸூல் என்றும் சாட்சி கூறுகின்றேன்.

கலிமா ஷஹாதாவினை மனப்பாடம் செய்க.

# 7 அல் அதான்

اَللّٰهُ أَكْبَـرُ . اللّٰهُ أَكْبَـرُ
أَشْـــهَـدُ أَنْ لَآ إِلٰـهَ إِلَّا اللّٰهُ
أَشْـــهَـدُ أَنَّ مُحَمَّداً رَّسُولُ اللّٰهِ
حــيَّ عَلَى الصَّـلَاةِ
حــيَّ عَلَى الْفَـلَاحِ
اَللّٰهُ أَكْبَـرُ اللّٰهُ أَكْبَـرُ

اَللّٰهُ أَكْبَـرُ . اللّٰهُ أَكْبَـرُ
أَشْـــهَـدُ أَنْ لَآ إِلٰـهَ إِلَّا اللّٰهُ
أَشْـــهَـدُ أَنَّ مُحَمَّداً رَّسُولُ اللّٰهِ
حــيَّ عَلَى الصَّـلَاةِ
حــيَّ عَلَى الْفَـلَاحِ
لَآ إِلٰـهَ إِلَّا اللّٰهُ

மௌனமாக இருப்போம்.

அதற்குப் பதில் கூறுவோம்.

தொழுகைக்குச் செல்வோம்.

ஒரு மாணவர் அதானை அழகாகக் கூறம்போது, வகுப்பில் உள்ள ஏனைய மாணவர்கள் அதற்குப் பதில் கூறுதல்.

# 8 சுத்தமாக இருப்போம் - I

நாம்
ஆரோக்கியமாக
வாழ
சுத்தமாக இருப்போம்.

கை, கால், முகம்
கழுவுவோம்.

குளித்து உடலைச்
சுத்தம் செய்வோம்.

நகங்களை
வெட்டுவோம்.

முடிகளைச் சீவி
அழகு படுத்துவோம்.

ஆடைகளைச்
சுத்தமாக
வைத்திருப்போம்.

சுத்தம் பேணி பாதணி அணிவோம்.

வீட்டில் உபயோகிக்கும் பாத்திரங்களையும் கழுவி சுத்தமாக வைப்போம்.

நாம் சுத்தமாகவும் அழகாகவும் இருக்கும்போது மற்றவர்கள் எம்மீது அன்பு காட்டுவார்கள்.

அல்லாஹ்வும் எம்மை நேசிப்பான்.

‘‘அல்லாஹ் அழகானவன்.
அவன் அழகை விரும்புகின்றான்’’

இடைவெளி நிரப்புக.

1. குளித்து உடலைச் ………………… செய்வோம்.

2. முடிகளைச் ……………… அழகு படுத்துவோம்.

3. நகங்களை ……………. சுத்தம் பேணுவோம்.

# 9 சுத்தமாக இருப்போம் - II

சூழலைச் சுத்தமாக வைப்போம்.

வீட்டைச் சுத்தமாக வைப்போம்.

மற்றவர்கள் சுத்தம் செய்யும்போது அவர்களுக்கு உதவுவோம்.

புத்தகம், உடை, விளையாட்டுப் பொருள் போன்றவற்றை உரிய இடங்களில் வைப்போம்.

வீட்டு முற்றத்தைச் சுத்தமாக வைப்போம்.

பூச்செடிகள் வளர்த்து அழகுபடுத்துவோம்.
அவற்றை நீர்ப் பாய்ச்சிப் பாதுகாப்போம்.

‘‘அல்லாஹ் சுத்தமானவன்.
அவன் சுத்தத்தை விரும்புகின்றான்’’

சரி, பிழை கூறுக.

1. உடலைச் சுத்தப்படுத்த நீர் உதவும்.
( )

2. வீட்டை சுத்தப்படுத்த மண்வெட்டி உதவும்.
( )

3. நிலத்தைச் சுத்தப்படுத்தக் குப்பைவாரி உதவும்.
( )

4. வெளிச் சூழலைச் சுத்தப்படுத்த தும்புத்தடி உதவும்.
( )

# 10 ஒழுக்கம் பேணுவோம்

தும்மும் போதும், இருமும் போதும்
கைக்குட்டையைப் பயன்படுத்துவோம்.

தும்மிய பின் வாயையும், மூக்கையும்
துடைப்போம்.

اَلْحَمْدُ لِلّٰهِ
அல்ஹம்துலில்லாஹ்!

என அல்லாஹ்வைப் புகழ்வோம்.

இடது பக்கம் குனிந்து எச்சிலை உமிழ்வோம்.

கொட்டாவி விடும்போது வாயை
கையால் மறைப்போம்.

أَعُوْذُ بِاللَّهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ

'அஊது பில்லாஹி மினஷ் ஷெய்தானிர் ரஜீம்'

என்று கூறுவோம்.

ஒழுக்கங்களைப் பேணுவோம்.
நல்ல பிள்ளையாக வாழ்வோம்.

## பயிற்சி

பொருத்துக.

| அ | ஆ |
|---|---|
| சாப்பிட முன் | اَلْحَمْدُ لِلّٰه |
| தும்மிய பின் | أَعُوْذُ بِاللّٰه |
| கொட்டாவி விட்ட பின் | بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ |

# 11 வகுப்பறையில் சுத்தம் பேணுவோம்

வகுப்பறையைச் சுத்தமாகவும் அழகாகவும் வைப்போம்.

கதிரை, மேசைகளை ஒழுங்காக வைப்போம்.

வகுப்பறைச் சுவர்களைச் சுத்தமாக வைப்போம்.

புத்தகப்பை, குடிநீர் போத்தல் போன்றவற்றை உரிய இடங்களில் வைப்போம்.

குப்பைகளை உரிய இடத்தில் மட்டுமே இடுவோம்.

ஆக்கங்களை முறையாகக் காட்சிப் படுத்துவோம்.

அவற்றைப் பார்த்து மகிழ்வடைவோம்.

எல்லா ஆக்கங்களையும் மதிப்போம்.

ஆரோக்கியமாக அமர்ந்திருப்போம்.

சுத்தம் ஈமானின் பாதி என்பதை
ஏற்று நடப்போம்.

பொருத்துக.

| அ | ஆ |
| --- | --- |
| வகுப்பறையில் இருப்பது | இராக்கை |
| குப்பைகளைப் போடுவது | சுவர் |
| காட்சிப்படுத்தும் இடம் | கதிரை, மேசை |
| புத்தகம், நீர் போத்தல் வைப்பது | குப்பைத் தொட்டி |

# 12 ஒழுக்க விழுமியங்களைக் கடைப்பிடிப்போம் - I

தூங்குமிடத்தைச் சுத்தமாக வைத்திருப்போம்.

தூங்குமுன் பல் துலக்கிக் கொள்வோம்.

படுக்கையைத் தயார் செய்துகொள்வோம்.

தூங்குமுன் விரிப்பை உதறிக்கொள்வோம்.

اَللّٰهُمَّ بِاسْمِكَ أَمُوْتُ وَأَحْيَا

என்ற துஆவை ஓதிக்கொள்வோம்.

வலது பக்கமாகத் திரும்பித் தூங்குவோம்.

தூங்கி எழுந்ததும்

الْحَمْدُ لِلَّهِ الَّذِيْ أَحْيَانِيْ بَعْدَ مَا أَمَاتَنِيْ وَإِلَيْهِ النُّشُوْرُ

எனும் துஆவை ஓதுவோம்.

அல்லாஹ்வைப் புகழ்வோம்.

இஸ்லாம் கூறும் இவ்வழிமுறைகளைப் பின்பற்றி நடப்போம்.

நன்மைகளைப் பெறுவோம்.

ஒழுங்குபடுத்தி இலக்கமிடுக.

- துஆ ஓதல் ( )
- பல் துலக்குதல் ( )
- படுக்கையைத் தயார் செய்தல் ( )
- வலது பக்கமாகத் திரும்பித் தூங்குதல் ( )

# 13 ஒழுக்க விழுமியங்களைக் கடைப்பிடிப்போம் - II

கழிவுகளை அகற்றுவதற்கு இஸ்லாம் சில ஒழுங்கு முறைகளைக் கற்றுத் தந்துள்ளது. அவற்றை அறிந்து பின்பற்றி நடப்போம்.

மலசலம் கழிக்க மிகப் பொருத்தமான
இடம் கழிப்பறையாகும்.

இடது காலை முன் வைத்து
கழிப்பறைக்குள் நுழைவோம்.

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ

என்ற துஆவை
ஓதிக்கொள்வோம்.

அங்கு பேசிக்
கொண்டிருப்பதைத்
தவிர்த்துக்கொள்வோம்.

திரும்பி வரும்போது வலது
காலை முன்வைத்து
வெளியேறி

غُفْرَانَكَ

என்ற துஆவை
ஓதிக்கொள்வோம்.

சவர்க்காரமிட்டுக்
கைகளை
கழுவிக்கொள்வோம்.

காலகளையும் கழுவிக்கொள்வோம்.

இஸ்லாமிய ஒழுக்க முறைகளைப்
பின்பற்றுவோம்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
அவர்களது வழிநடப்போம்.

சரி, பிழை கூறுக.

1. மலசலம் கழித்த பின் கைகளைக் கழுவிக் கொள்வோம். ( )

2. மலசலம் கழிக்கும்போது கதைத்துக் கொண்டு இருப்பது நல்ல பழக்கமல்ல. ( )

3. வலது காலை முன்வைத்தே மலசல கூடத்துக்குள் நுழைய வேண்டும். ( )

# 14 மதித்து நடப்போம்

பிறரை மதித்து நடப்போம்.

அயலாரை அனுசரித்து வாழ்வோம்.

மற்றவர்களுக்கு உதவி செய்வோம்.

எல்லா உயிர்கள் மீதும் அன்பு காட்டுவோம்.

சிறுவர்களுக்கு இரக்கம் காட்டுவோம்.

மூத்தோருக்கு மரியாதை செய்வோம்.

இவை முஸ்லிம்களின் பண்புகளாகும்.

இவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவோம்.

பொருத்துக.

| அ | ஆ |
|---|---|
| அயலாரை | மரியாதை செய்வோம் |
| உயிர்களுக்கு | உதவி செய்வோம் |
| மற்றவர்களுக்கு | அனுசரிப்போம் |
| மூத்தோருக்கு | அன்பு காட்டுவோம் |

# 15 ஆலிம்கள்

அல்லாஹ் அருளிய அறிவையும்
அண்ணல் நபியின் வழியையும்
கற்றுத் தேர்ந்த ஆலிம்களே
கண்ணியம் பெறுவதற்குரியவரே

அல்குர்ஆனை ஓதிடவும்
மார்க்க நெறியை அறிந்திடவும்
ஒழுக்கம் பேணி வாழ்ந்திடவும்
கற்றுத் தருபவர் அவராவார்

அறிவைத் தேடி அவர்களிடம்
அண்டிச் செல்வோம் வருவீரே
அழகாய் வாழ்ந்திட வழிசொல்வார்
அவற்றை ஏற்று வாழ்ந்திடுவோம்

சரி, பிழை கூறுக.

1. ஆலிம்கள் கண்ணியத்துக்குரியவர்கள். (   )

2. ஆலிம்களை நெருங்கக் கூடாது. (   )

3. அவர்கள் வாழ்வதற்கு வழிகாட்டுவர். (   )

4. அவர்கள் முன்மாதிரியானவர்கள். (   )

# 16 ஆசிரியர்கள்

ஆலிம் போன்றே ஆசானும்
ஆர்வத்துடனே கற்பிப்பார்
வாழும் வழியைப் போதிப்பார்
நாளும் அவரைத் தொடர்வோமே

கண்ணைப் போன்ற கல்வியினை
எண்ணை எழுத்தை மற்றுமுள
அனைத்தும் அறிய அவரிடமே
ஆவலுடனே செல்வோமே

அவரின் சொற்படி நடப்பவரும்
அவரை மதித்து வாழ்பவரும்
நபியின் வாழ்த்துக்குரியவரே
நாமும் அவ்வழி நடப்போமே

## இணைக்குக.

| | |
|---|---|
| ஆசிரியர் ஆர்வத்துடன் | போதிப்பார் |
| எண்ணையும் எழுத்தையும் | கற்பிப்பார் |
| வாழும் வழியை | காண்பிப்பார் |

# 17 முன்மாதிரிச் சிறுவன்

அஹ்மத் என்ற பாலகன்
அழகு தோற்றம் உள்ளவன்
சுத்தமாக இருப்பவன்
ஒழுக்கமாக நடப்பவன்

காலை நேரம் ஆனதும்
கண் விழித்து எழும்புவான்
தொழுது ஓதி படித்த பின்
பள்ளிச் செல்ல பழகுவான்

உண்மை பேசி வாழ்பவன்
உதவி செய்து மகிழ்பவன்
அன்னை தந்தை இருவரையும்
இரக்கமாகப் பார்ப்பவன்

அவனைப் பார்த்து ஒழுகுவது
எமக்கு நல்ல மாதிரியாம்
அவனைப் போல நாங்களும்
ஒழுக்கம் பேணப் பழகுவோம்

அஹ்மதிடம் காணப்படும் நல்ல பண்புகளைத் தருக.

1. ................................................................

2. ................................................................

3. ................................................................

4. ................................................................

5. ...............................................................

# 18 உதவி செய்வோம்

நாங்கள்,

தாய், தந்தையருக்கு உதவி செய்வோம்.

தம்பி, தங்கைகளுக்கு உதவி செய்வோம்.

பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் தேவையான வற்றைச் செய்து கொடுப்போம்.

அயலவர்களுக்கும் நண்பர்களுக்கும் உதவி செய்வோம்.

எவருக்கும் தொல்லை கொடுக்க மாட்டோம்.

உயிர்களுக்கு தீங்கு செய்ய மாட்டோம்.

நன்மை செய்து சுவர்க்கம் செல்வோம்.

தீமை தவிர்த்து நரகைத் தடுப்போம்.

## இணைக்குக.

| | |
|---|---|
| 1. தீமை தவிர்த்து | தீங்கு செய்ய மாட்டோம் |
| 2. அயலவர் நண்பர்களுக்கு | நரகம் தடுப்போம் |
| 3. உயிர்களுக்கு | உதவி செய்வோம் |

# 19 முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தகப்பனார் அப்துல்லா ஆவார்.

அவர் பிறக்கும் முன்பே தகப்பன் இறந்துவிட்டார்.

அவரது தாயார் ஆமினா ஆவார்.

அவரின் வளர்ப்புத் தாயார் ஹலீமா நாயகி ஆவார்.

ஹலீமா அம்மையாரே பால் ஊட்டி வளர்த்தார்.

ஆறு வயதில் தாயார் ஆமினாவும் இறந்துவிட்டார்.

பின்னர் அப்துல் முத்தலிபிடம் வளர்ந்தார்.

எட்டு வயதில் அவரும் இறந்துவிட்டார்.

பின்னர் பெரிய தந்தை அபூதாலிபிடம் வளர்ந்தார். பெரியவராகும் வரை அவருடனே வாழ்ந்தார்.

இடைவெளி நிரப்புக.

1. முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தை ................ ஆவார்.

2. முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பாலூட்டி வளர்த்தவர் .................... நாயகி ஆவார்.

3. தாயார் இறந்த பின் .................................. வளர்ந்தார்.

4. பெரியவராகும் வரை ................................. வளர்ந்தார்.

# 20 இறுதித் தூதர்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள்.

அவரே எல்லாத் தூதர்களிலும் இறுதியானவர்.

இதனால் அவரை ‘காத்தமுன் நபி’ என்பர்.

இதன் பொருள் ‘இறுதி நபி’ என்பதாகும்.

அவரது பெயர் குறிப்பிடப்படும்போது அவர்மீது ஸலவாத்துச் சொல்வோம்.

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ

وَعَلَى آلِ سَيِّدِنَا مُحَمَّدٍ

## செயற்பாடு

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது சொல்லும் ஸலவாத்தை மனனமிட்டுக் கூறுக.

# 21 அனைவருக்கும் தூதர்

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்.

அவர் அரேபியாவில் மக்கா நகரில் பிறந்தார்.

அவர் எல்லா காலத்தவருக்கும் தூதுவராவார்.

அவர் எல்லா மக்களுக்கும் தூதுவராவார்.

அவர் முழு உலகுக்குமான தூதுவராவார்.

சரி, பிழை கூறுக.

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார். ( )

2. அவர் மதீனாவில் பிறந்தார். ( )

3. அவர் எல்லா மக்களுக்கும் தூதர் ஆவார். ( )

4. அவர் அறபு மக்களுக்கு மாத்திரம் தூதர் ஆவார். ( )

# நற்குணம்

முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மூத்தோரை மதித்து நடப்பார்கள்.

மூத்தோருக்கு மரியாதை செய்வார்கள்.

அவர்களின் சொற்படி நடப்பார்கள்.

அவர்களின் நன்மதிப்பைப் பெறுவார்கள்.

சிறுவர்களுக்கு இரக்கம் காட்டுவார்கள்.

அவர்களுக்கு உதவியும் செய்வார்கள்.

நாமும் மூத்தோரை கண்ணியப்படுத்துவோம்.

சிறுவர்களுக்கு இரக்கம் காட்டுவோம்.

பின்வருவனவற்றில் சரியானதை மாத்திரம் தெரிவுசெய்து எழுதுக.

1. மூத்தோரை மதிக்க வேண்டும்.

2. சிறுவர்களுக்கு இரக்கம் காட்ட வேண்டும்.

3. மூத்தோருக்கு மட்டும் உதவ வேண்டும்.

4. மூத்தோரின் சொற்படி நடக்க வேண்டும்.

5. சிறுவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

1. ............................................................................

2. ............................................................................

3. ............................................................................

4. ............................................................................

5. ............................................................................

# 23 ஸூரத்துல் இஃஃலாஸ்

## سُوْرَةُ الْإِخْلَاصِ

குல்ஹுவல்லாஹு அஹத்

அல்லாஹுஸ் ஸமத்

லம் யலித்

வலம் யூலத்

வலம் யகுல்லஹு குப்வன் அஹத்

ஸூரத்துல் இஃலாஸ் அல்லாஹ்வைப் பற்றி மட்டுமே கூறும் ஸூராவாகும்.

ஸூரத்துல் இஃலாஸை ஓதுவோம்.

அதனைச் செவிமடுப்போம்.

மனனமிட்டு ஓதுவோம்.

ஸூரத்துல் இஃலாஸை மனனமிட்டு ஒப்புவிக்குக.

# 24 மஸ்ஜித் - I

மஸ்ஜித் புனிதமான இடமாகும்.

அது அல்லாஹ்வின் மாளிகையாகும்.

அங்கு நுழையுமுன் எம்மைச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.

எங்கள் உடலையும் உடைகளையும் சுத்தம் செய்துகொள்ள வேண்டும்.

கண்ணியமான உடையை அணிந்து செல்ல வேண்டும்.

பாதணிகளைக் கழற்றிய பின்பே உள்ளே நுழைய வேண்டும்.

வலது காலை வைத்து உள்ளே நுழைய வேண்டும்.

மஸ்ஜிதைக் கண்ணியமாகக் கருத வேண்டும்.

சரி, பிழை கூறுக.

1. மஸ்ஜித் மிகப் புனிதமான இடம் ஆகும். ( )

2. மஸ்ஜித் உள்ளே நுழையும்போது பாதணி கழற்றத் தேவையில்லை. ( )

# 25 மஸ்ஜித் - II

மஸ்ஜிதில் அமைதியாக இருக்க வேண்டும்.

அங்கு வுழூவுடன் இருப்பது நல்ல பழக்கமாகும்.

அங்கு வரிசையாக அமர்ந்து இருக்க வேண்டும்.

அதன் கண்ணியத்தைப் பாதுகாக்க வேண்டும்.

அங்கு தொழுகை நடக்கும்.

போதனைகளும் இடம்பெறும்.

அங்கு வேறு பல நல்ல காரியங்களும் இடம்பெறும்.

அவற்றில் நாமும் கலந்துகொண்டு
நன்மை பெறுவோம்.

மஸ்ஜிதில் கடைப்பிடிக்க வேண்டியவற்றை புத்தகத்தைப் பார்த்து எழுதுக.

1. ..........................................................

2. ..........................................................

3. ..........................................................

4. ..........................................................

5. ..........................................................

## 26 இமாம் அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி

இமாம் அப்துல் காதிர் ரஹ்மதுல்லாஹி அலைஹி ஜீலான் எனும் ஊரில் பிறந்தார்.

அவரது தந்தை ஸெய்யித் அபூ ஸாலிஹ் ஆவார்.

அவரது தாய் உம்முல் கைர் ஆவார்.

அவர் சிறு வயதுமுதல் உண்மையே பேசி வந்தார்.

தாய் சொல்லைத் தட்டாமல் நடந்தார்.

கல்வி கற்பதில் ஆர்வம் காட்டினார்.

கல்வி பெற பக்தாத் சென்றார்.

பக்தாதில் கல்வி கற்றார்.

பின்னர் சிறந்த கல்விமானாக உயர்வடைந்தார்.

அவர் மக்களுக்கு நல்லுபதேசம் செய்தார்.

அவர் பலரை சன்மார்க்க வழியில் நடக்க வைத்தார்.

அவரை இஸ்லாமிய உலகம் பாராட்டுகிறது.

நாமும் கல்வி கற்று உயர்நிலையை அடைவோம்.

இடைவெளி நிரப்புக.

1. இமாம் அப்துல் காதிர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் ஊர் ...................... ஆகும்.

2. அவரது தந்தை.................................. ஆவார்.

3. அவரது தாய் .................................... ஆவார்.

4. அவர் கல்வி கற்ற இடம் ...................... ஆகும்.